# அன்பியங்கள்

## ஓர் அறிமுகம்



- "ஜன்னல்களைத் திறந்துவிடுங்கள்... புதுக்காற்று வீசட்டும்..." பழமைக்காற்றில் புழுங்கிப்போன திருச்சபைக்குள் மறுமலர்ச்சிக் காற்று தென்றலாய் வீச வழிவகுத்த திருத்தந்தை 23ஆம் அருளப்பரின் வார்த்தைகள் இவை.

- அவர் தொடங்கிவைத்த இரண்டாம் வத்திக்கான் சங்கம் திருச்சபையின் சிந்தனை மற்றும் அணுகுமுறைகளில் பல மாற்றங்களைக் கொண்டு வந்ததுபோல அமைப்புமுறையில் ஒரு பெரும் மாற்றத்தைக் கொண்டு வந்தவை அடித்தளக் கிறித்தவ அன்பியங்கள் என்றால் மிகையாகாது.

- அன்பியங்கள் நற்செய்தி அறிவிப்பின் சிறந்த தளங்கள் எனத் திருத்தந்தை இரண்டாம் அருள் சின்னப்பர் வர்ணிக்கிறார். இறையியல் வல்லுனர்கள் அன்பியங்களைத் திருச்சபையின் புது வடிவமாகக் காண்கின்றனர்

- அன்பியங்கள் என்றால் என்ன? அவை எவ்வாறு செயல்படுகின்றன? திருச்சபையில் மறுமலர்ச்சியின் சின்னமென அன்பியங்களை ஏன் அழைக்கிறோம்?

## சிறு கிறித்தவ அன்பியங்கள்

பங்கு அளவில் 20 அல்லது 30 அண்டை வீட்டுக் குடும்பங்கள் ஒன்று சேர்ந்து தங்கள் கிறித்தவ வாழ்வைப் பகிர்ந்துகொள்ளும் ஒரு புதிய அமைப்பு முறையே அன்பியங்கள். அவ்வன்பியங்கள் மூன்று முக்கிய அம்சங்களைக் கொண்டவை.

1. இவை அடிப்படையில் ஒரு பொதுநிலையினர் இயக்கம். திருச்சபையின் கோபுர அமைப்பிற்கு மாற்றாக மக்களை மையமாகக் கொண்டு இயங்கும் திருச்சபையின் புதுவடிவமே அன்பியங்கள். இங்கு எல்லா மக்களுடைய பங்கேற்பும் வலியுறுத்தப்படுகின்றன.

2. அன்பியங்களின் மையமாக விளங்குவது இறைவார்த்தை. கத்தோலிக்க மக்கள் மத்தியிலிருந்து காலப்போக்கில் அகன்று போன விவிலியம் அன்பியங்கள் மூலம் மீண்டும் மக்கள் வாழ்வின் மையமாக மாறிவருகிறது. நற்செய்திப் பகிர்வு அன்பியங்களின் முதுகெலும்பு எனலாம்.

3. இறைவார்த்தையின் ஒளியில் தங்கள் வாழ்க்கைச் சூழலை ஆய்வு செய்வதும் இணைந்து திட்டமிட்டுச் செயல்படுவதும் அன்பியங்களின் முக்கிய அம்சம். வார்த்தைக்கும் வாழ்வுக்கும் பாலம் அமைப்பவை அன்பியங்கள். வார்த்தையின் ஒளியில் வாழ்வும் வாழ்வின் ஒளியில் வார்த்தையும் விளக்கப்படுகின்றன. நிகழ்வாழ்வை விமர்சனத்திற்குட்படுத்தி மாற்றத்தின் கருவியாக அன்பியங்கள் வாழ அழைக்கப்படுகின்றனர்.

## ஏன் அன்பியங்கள்?

கிறித்தவ வாழ்வு ஒரு சமூக வாழ்வு. இறைவனைத் தந்தையாகக் கொண்டு மானிடர் யாவரும் சகோதர உறவில் இணையும் வாழ்வே கிறித்தவ வாழ்வு.

நாம் இன்று பங்கு என்ற அமைப்பில் செயல்பட்டுக்கொண்டிருக்கிறோம். ஒவ்வொரு பங்கிலும் நூற்றுக்கணக்கான, ஏன் பல பங்குகளில் ஆயிரக்கணக்கான மக்கள் வாழ்கிறார்கள். ஆயிரம் கிறித்தவர்கள் ஒரு சமூகமாக வாழமுடியுமா?

ஒருவரையொருவர் தெரிந்துகொண்டு அவர்களைப் புரிந்து அன்பு செய்து வாழும் ஓர் அமைப்பைத்தான் சமூகம் (Community) என்றழைக்கிறோம். இங்கே உறவுகள் முக்கியத்துவம் பெறுகின்றன.

ஆனால் இன்றிருக்கும் அமைப்பில் இது சாத்தியமில்லை. பெரிய மக்கள் கூட்டமாக ஆலயத்தில் ஒன்று கூடுகிறோம். ஞாயிறு திருப்பலியோடு பலருடைய கிறித்தவ கடமைகள் முடிந்து விடுகின்றன.

கடவுளுக்கும் மனிதனுக்கும் பாலம் அமைக்க முயற்சிக்கும் இன்றைய அமைப்பு முறைகள் மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையே பாலம் அமைக்க இயலாமல் தத்தளிக்கின்றன.

கத்தோலிக்க சபையில் அருள் அடையாளங்களுக்குத் தரப்படுகிற முக்கியத்துவம் இறைவார்த்தைக்கு அளிக்கப்படவில்லை.

அருட்பணியாளர்களை மையமாகக்கொண்டே பங்கு என்னும் அமைப்பு இயங்குவதால் இறைமக்களின் அருள்வாழ்விலும் சார்புநிலை உருவாகிறது. சமூக வாழ்வின் வளர்ச்சியில் பல்வேறு நிலைகளில் பங்கேற்கும் பொதுநிலையினர் திருச்சபை வாழ்வில் பார்வையாளர்களாகவே இருக்கிற நிலை.



துவக்கக் காலத்தில் பொதுநிலையினரின் இயக்கமாகத் தோன்றிய திருச்சபை மீண்டும் பொதுநிலையினர் மையத் திருச்சபையாகப் பிறப்பெடுக்க வேண்டும். இதுவே உண்மையான மறுமலர்ச்சியாக இருக்க முடியும். இந்நோக்கத்தைக் கண்முன் கொண்டு இதற்குப் பதிலளிக்கும் வகையில் தோன்றியுள்ள அமைப்பு முறையே அன்பியங்கள்.

## இவை அல்ல அன்பியங்கள்...

திருச்சபையில் பல்வேறு குழுக்கள் இயங்கிவருகின்றன. பல பொதுநிலையினர் அமைப்புகளும் உள்ளன. அவை அனைத்துமே அன்பியங்கள் ஆகா. குறிப்பாக,

**செபக் குழுக்கள்**: இவை திருச்சபையின் ஆன்மீக வளர்ச்சிக்குப் பெரிதும் துணை செய்கின்றன. ஆனால் செபத்தை மட்டுமே மையமாகக் கொண்டு இயங்கும் குழுக்களை அன்பியங்கள் எனக்கொள்ள முடியாது. அன்பிய வாழ்வில் செப வாழ்வு முக்கிய பங்கு வகிக்கிறது. அத்தோடு சமூக—பொருளாதார வாழ்விலும் அன்பியங்கள் பெரும் அக்கறை எடுத்துக்கொள்கின்றன.

**பக்த சபைகள்**: இவை திருச்சபையின் வெவ்வேறு கரிசனைகளைப் பிரதிபலிக்கின்றன. ஒவ்வொரு பக்த சபைக்கென்றும் ஒரு தனிப்பட்ட வரம் உண்டு. ஆனால் அன்பியங்கள் திருச்சபையின் உள்ளார்ந்த அடிப்படை அமைப்பு (Basic Cell) என்பதால் அவை திருச்சபையின் ஒட்டுமொத்தக் கரிசனைகளையும் உள்ளடக்குகின்றன. எனவே பக்த சபைகள் அன்பியத்தின் அங்கங்களாக இருக்க முடியும். ஆனால் அன்பியங்கள் பக்த சபைகள் அல்ல.

**சிறு குழுக்கள்**: திருச்சபையில் தோன்றும் பல்வேறு குழுக்கள் திருச்சபைக்குள் உயிராற்றலைக் கொண்டுவர முடியும். ஆனால் அவை ஒவ்வொன்றும் குறிப்பிட்ட ஓர் இலக்கை வைத்து குறிப்பிட்ட உறுப்பினர்களால் நடத்தப்படுபவை. ஆனால் முதியவர், சிறியவர், கற்றோர், கல்லாதோர் என எல்லோரையும உள்ளடக்கியது அன்பியங்கள். சிறு குழுக்கள் அதன் உறுப்பினர்கள் தன்னார்வத்தால் தோன்றுபவை. ஆனால் அன்பிய வாழ்வு திருமுழுக்குப் பெற்ற எல்லோரிடமும் எதிர்பார்க்கப்படுகின்ற ஒரு கடமை.

## அன்பியங்களும் பங்கு மறுமலர்ச்சியும்

அன்பியங்கள் உருவாகியுள்ள பங்குகளில் மறுமலர்ச்சிக்கான அடையாளங்கள் ஏற்கனவே காணப்படுகின்றன. அன்பியங்கள் வழி, பங்குப்பேரவை அமைக்கப்பட்ட இடங்களில் மக்களின் பரவலான பங்கேற்பைக் காண முடிகிறது. திருவழிபாடுகள் மக்களின் பங்கேற்புடன் பொருள் செறிந்தவையாக மாறிவருகின்றன. உறவுமுறைகளில் ஏற்பட்டுவரும் மாற்றம் குறிப்பிடத்தக்க ஒன்று. 'என் அயலான் யார்?' என்று கேட்கும் நிலை மாறி 'என் அயலானுக்கு நான் பொறுப்பாளி' என்னும் நிலையை அன்பியங்கள் அமைக்கப்பட்ட பல பங்குகளில் காணமுடிகிறது. ஏழை, எளியவர்களின் பிரச்சனைகளைத் தம் பிரச்சனைகளாகக் காணும் மனநிலை அன்பிய மக்களிடம் உருவாகி வருகிறது. மொத்தத்தில் கிறித்தவ வாழ்வின் புது இலக்கணமாக அன்பியங்கள் மாறி வருகின்றன.

## மாநாட்டுப் பாடல்

அன்பியங்கள் அமைப்போம் — இறை
அன்பியங்கள் அமைப்போம்
இயேசு கிறிஸ்துவில் இணைந்து வாழும்
அன்பியங்கள் அமைப்போம்

1. ஒருவர் ஒருவரை மன்னித்து வாழும் அன்பியங்கள்..
   ஒருவர் ஒருவர்க்கு உதவி செய்திடும் அன்பியங்கள்...
2. ஒருவர் ஒருவர்க்கு ஆறுதல் அளிக்கும் அன்பியங்கள்...
   ஒருவர் ஒருவரின் கவலையை நீக்கும் அன்பியங்கள்...
3. ஒருவர் ஒருவரின் கண்ணீரைத் துடைக்கும் அன்பியங்கள்...
   ஒருவர் ஒருவரின் வறுமையைப் போக்கும் அன்பியங்கள்...
4. ஒருவர் ஒருவரின் பகைமையை அகற்றும் அன்பியங்கள்...
   ஒருவர் ஒருவர்க்கு வாழ்வினைக் கொடுக்கும் அன்பியங்கள்...

தொகுப்பு **வ. அருள்ராஜ்**